(க) தாணுவா? புருடனா? என்னும் சம்சயமோ தாணுவினும் அவ்வாறே புருடனிடத்து மிருக்கும் தர்மமாகிய அதிக வுயர்ச்சி வடிவ சாதாரணதர்மம் எதுவோ அதன் உணர்ச்சியாற்றோன்றியதா யிருத்தலின் சாதாரணதர்மஞானத்தாற்றோன்றியதாம். (உ) சப்தத்தன்மையாகிய தர்மம் ஆகாயாதி நித்தியபதார்த்தங்களிலு மிருப்பதில்லை. அவ்வாறே கடாதி யநித்தியபதார்த்தங்களிலு மிருப்பதில்லை. கேவல சப்தமாத்திரத்திலேயே அச்சப்தத்தன்மைத்தர்ம மிருக்கின்றது என்னும் உணர்ச்சிக்குப் பின் இப்புருடனுக்குச் "சத்தம் நித்தியமா? அன்று?" என்னும் சப்தத்தில் நித்தியத்துவ நித்தியத்துவாபாவவிசேஷணமுடைய சம்சய முண்டாகின்றது. அச்சம்சயம் அச்சத்தத்தன்மைவடிவ அசாதாரணதர்மத்தின் ஞானத்தாற் றோன்றியதா யிருத்தலின் அசாதாரணதர்மஞானத்தாற்றோன்றியதாம். (ந) யதார்த்தாநுபவமாகிய பிரமையி லிருக்கும் பிரமாத்துவதர்மத்தினை மீமாம்ஸகர் தன்னாற்கொள்ளப்படுவ தென்றும், நையாயிகர் பிறிதாற்கொள்ளப்படுவ தென்றும் கூறும் இருவகை வசனத்தையும் கேட்ட புருஷனுக்குப் "பிரமாத்துவம் தன்னாற்கொள்ளப்படுவதா? பிறிதாற்கொள்ளப்படுவதா?" என்று சம்சய முண்டாகின்றது. அச்சம்சயம் விப்பிரதிபத்திவாக்கியஞானத்தாற்றோன்றியதாம். அச்சம்சயம் பகிர்விஷயகம் (புறவிடயத்தது), அந்தர்விஷயகம் (உள்விடயத்தது) என மீண்டும் இருவகைப்படும். அவற்றுள் (வெளிப்பதார்த்தத்தை விஷயஞ்செய்யும்) பகிர்விஷயகசம்சயம் திருசியமானதர்மிகம் (காணப்படுந்தர்மியினது), அதிருசியமானதர்மிகம் (காணப்படாத தர்மியினது) என இருவகைப்படும்.

அவற்றுள்,

[க] உயர்ச்சிவிசிஷ்டதர்மியினைக் காணுதலால் "இது தாணுவா? புருடனா? என்றுண்டாகும் சம்சயம் திருசியமான தர்மிக மெனப்படும். [உ] வனத்தில் விருக்ஷத்தின் கிளை முதலியவற்றால் மறைக்கப்பட்டுள்ள ஆப்பிண்டத்தின் அல்லது ஆமாப்பிண்டத்தின் கொம்புமாத்திரத்தைப் பார்த்தலால் இப்புருடனுக்கு "இஃது ஆவா? ஆமாவா?" என்று எச்சம்சய முண்டாகின்றதோ; அச்சம்சயம் அதிருசியமானதர்மிக மெனப்படும்.

## ௪. பிரயோஜனம்.

௪. பிரயோஜனம் முக்கியம் (சுகம் துக்காபாவம்), கௌணம் (முக்கியப்பிரயோஜனத்தின் சாதனம்) மென இருவகைத்து.

## ரு. திருஷ்டாந்தம்.

ரு. வாதிப்பிரதிவாதிகளது நிச்சயத்திற்கு விஷயமாகும் பதார்த்தம் திருஷ்டாந்தம். அது சாதர்மியம் (அந்வயதிருஷ்டாந்தம்), வைதர்மிய (வேதிரேக திருஷ்டாந்த) மென இருவகைத்து.

## சு. சித்தாந்தம்.

சு. சித்தாந்தம் சாஸ்திரமுணர்ந்தவன் பிரமாணமுடைமையால் அங்கீகரித்த பொருள். அது சர்வதந்திரசித்தாந்தம், பிரதிதந்திரசித்தாந்தம், அதிகரணசித்தாந்தம், அப்பியுபகமசித்தாந்தமென நான்குவகைப்படும்.

அவற்றுள்,

(க) சர்வதந்திரசித்தாந்தம் என்பது சர்வசாஸ்திரங்களுக்கும் சம்மதமாய்த் தனது சாஸ்திரத்தில் அங்கீகரிக்கப்பட்ட சித்தாந்தமாம். எங்ஙனம்: கிராணாதிகளில் இந்திரியத்தன்மையின் அங்கீகாரமும், அவ்வாறே கந்தமுதலியவற்றில் கிராணாதி இந்திரியங்களின் அர்த்தத்தன்மையை அங்கீகரித்தலும், அவ்வாறே பிருதிவியாதி ஐந்தினும் பூதத்தன்மையை அங்கீகரித்தலுமாகிய இவைமுதலியன சர்வதந்திரசித்தாந்தமாம். (உ) எந்த அர்த்தம் வாதி அல்லது பிரதிவாதியாகிய ஒருவனாலேயே அங்கீகரிக்கப்பட்டு மற்றொருவனால் அங்கீகரிக்கப்படவில்லையோ அவ்வர்த்தம் பிரதிதந்திரசித்தாந்த மெனப்படும். எங்ஙனம்: மீமாஞ்சகர்மதத்திற் கொள்ளப்பட்டுள்ள சப்தத்தின் நித்தியத்தன்மை பிரதிதந்திரசித்தாந்தமாம். (ங) எவ்வர்த்தத்தின் சித்தி யுண்டாகவே எடுத்துக்கொண்ட அர்த்தத்தின் சித்தி யுண்டாகின்றதோ அது அதிகரணசித்தாந்த மெனப்படும். எங்ஙனம்: துவியணுகாதிவடிவ காரியத்தினைப் பக்ஷமாக வைத்து உபாதானகோசர அபரோக்ஷஞானம் இச்சை செயல்களையுடைய புருஷனால் ஆக்கப்படுந்தன்மை சித்தித்ததாகவே அவ்வீசுவரனுக்குச் சர்வஞ்ஞத்துவம் சித்தித்ததாகின்றது. அது அதிகரணசித்தாந்த மெனப்படும்.

(௪) வேறே சூத்திரங்களில் சொல்லப்படாத அர்த்தங்களை அங்கீ கரித்தல் அப்பியுபகமசித்தாந்த மெனப்படும். எங்ஙனம்: மனதில் இந்திரியத்தன்மையை அங்கீகரித்தல் அப்பியுபகமசித்தாந்த மெனப்படும்.

## எ. அவயவம்.

எ. அவயவம் பிரதிஞ்ஞை, ஏது, உதாகரணம், உபநயம், நிகமனம் என ஐவகைப்படும். அவற்றுள், ஏது வென்னும் அவய வம் அஞ்ஞாதவெதிரேகவியாப்திகஏதுபோதகம், அப்பிரதீதாந் வயவியாப்திகஏதுபோதகம், பிரதீதாந்வயவெதிரேக வியாப்திக ஏதுபோதகமென* மூவகைப்படும். உதாகரண மென்னும் அவய வம் அந்வயவியாப்திபோதகம், வெதிரேகவியாப்திபோதகமென இருவகைப்படும். உபநய மெனும் அவயவம் அந்வயி, வெதி ரேகியென் இருவகைப்படும்.

## அ. தர்க்கம்.

அ. தர்க்கம் வியாப்பியத்தின் ஆரோபத்தால் வியாபகத் தினை ஆரோபித்தல். அத்தர்க்கம் விஷயபரிசோதகம் வியாப்தி கிராஹகம் என்று இருவகைப்படும். அவற்றுள், (௧) இப்பர்வ தம் வந்நியபாவமுடையதா மாயின் தூமத்தின் அபாவ முடைய தாகும் என்னு மிவைமுதலிய தர்க்கம் விஷயபரிசோதக மெனப் படும். (௨) தூமம் ஒருகால் வந்நிவியபிசார முடையதாயின் வந்நியாற்றோன்றியதாகாது என்றல்முதலிய தர்க்கம் வியாப்தி கிராஹக மெனப்படும். இதனையே பிரமாணபாதிதார்த்தப்பிரசங்க மென்பர். அத்தர்க்கமே [௧] வியாகாதம், [௨] ஆத்மாசிரயம், [௩] இதரேதராசிரயம் (அந்நியோந்யாசிரயம்), [௪] சக்கிரிகை, [௫] அநவஸ்தை, [௬] பிரதிபந்தி, [எ] கல்பநாலாகவம், [அ] கல்பநாகௌரவம், [௯] உத்ஸர்க்கம், [௧0] அபவாதம், [௧௧] வையாத்தியம் என்னும் பேதத்தால் பதினொருவகைத்தாம், அவற்றுள், [௧] பரஸ்பர விருத்தமான தர்மங்களுக்கு ஒரு அதி கரணத்துள்ள சமுச்சயம் (கலப்பு) எதுவோ அதற்கு வியாகாத மென்று பெயர். எங்ஙனம்; "விவாதத்திற்கு விஷயமான ஜகத் தைப் பிரயத்தினத்தாற்றோன்றியதாம், காரியமாயிருத்தலின், கட

---

* இவற்றின் விரிவை பெருநூல்களிற் காண்க.

ம்போல;" என்னுமிடத்து ஜீவனது முயற்சிக்கோ சகல ஜகத்திற்
கும் காரணமாந்தன்மை சம்பவியாது. ஆதலால் இம்முற்கூறிய
அநுமானத்தினுல் ஈச்வரது பிரயத்னமே சகல ஜகத்திற்கும்
காரணவடிவமாகச் சித்திக்கின்றது. அங்கு இவ்வநுமானத்தில்
பிரதிவாதிக்கு ஜகத்தில் காரியத்தன்மைவடிவ ஏது இருக்குக.
பிரயத்னத்தாற் றோன்றாந்தன்மைவடிவ சாத்தியம் இருக்க
வேண்டாம் என்பதில் பாதக மில்லை என்று இவ்வாறு சங்கை
வாய்க்க: அவ்வியாகாதவடிவ தர்க்கத்தினுலேயே அச்சங்கையின்
நிவிருத்தி யுண்டாகின்றது. அங்குக் காரியத்தன்மையும் அவ்
வாறே பிரயத்னத்தாற்றோற்றாந்தன்மையபாவமுமாகிய இவ்வி
ரண்டு தர்மங்களும் பரஸ்பரம் விருத்தமாம். எப்படிக் கடமும்
கடத்தின் பிராகபாவமும் அவ்வாறே கடமுங் கடத்தின் பிரத்
தொம்சமும் பரஸ்பரம் விருத்தமோ, அவ்விருத்ததர்மங்க
ளுக்கு ஒரு வஸ்துவில் சமுச்சயம் (கலப்பு) சொல்லப்படவே
வியாகாதத்தின் அடைவுண்டாகின்றதோ, அதுபோலக் காரியத்
தன்மையும் பிரயத்னத்தாற்றோன்றாந்தன்மையபாவமுமாகிய
இவ்விரோதிதர்மங்கட்கும் ஒருவஸ்துவில் சமுச்சயம் சொல்லப்
படவே வியாகாதத்தின் அடைவே யுண்டாகின்றது. இது வியா
காததோஷம். [௨] அங்குக் கடம் கடத்தின் பிராகபாவம் என்னும்
இரண்டற்கும் ஓரிடத்துச் சமுச்சய முண்டாகாது. ஆனுல் காரி
யத்தன்மை பிரயத்னஜந்நிய மென்னும் இரண்டற்கும் ஓரிடத்
துச் சமுச்சய முண்டாம் என்று வாதி சங்கிக்கின் அவ்வாதியை
நோக்கி "கடம் கடப்பிராகபாவ மென்னும் இரண்டைவிட காரி
யத்தன்மை பிரயத்னஜந்நியத்துவாபாவ மென்னும் மிரண்டி
னும் சிறிது விசேஷ முண்டா? இல்லையா?" என்று கேட்கவேண்
டும். விசேஷ மில்லை யென்று கூறின், கடம் கடப்பிராகபாவ
மென்னும் இரண்டற்கும் எப்படி ஓரிடத்துச் சமுச்சய முண்
டாகிறதில்லையோ, அப்படியே காரியத்தன்மை பிரயத்னஜந்நி
யத்துவாபாவம் இவ்விரண்டற்கும் ஓரிடத்துச் சமுச்சய முண்
டாகாது. இங்கு விசேஷ முள்ள தென்று கூறின், எவ்விசேஷத்
தின் வலியால் காரியத்தன்மை பிரயத்னஜந்நியத்துவாபாவ
மென்னும் இவ்விரண்டு விருத்ததர்மங்களுக்கும் ஓரிடத்துச் சமுச்
சய முண்டாகிறதோ, அவ்விசேஷத்தில் அவ்விசேஷமே பிரமா

ணமா? அல்லது வேறு விசேஷம் பிரமாணமா? அங்கு அவ்விசேஷத்தில் அவ்விசேஷத்தினையே பிரமாணமெனக் கொள்ளின் ஆத்மாசிரயம் (தன்னைப்பற்றுதல்) உண்டாகும். அங்கு வியவதானம் (இடை) இன்றி யாதொரு தனக்குத் தனது அபேக்ஷையுளதோ அதற்கு ஆத்மாசிரய மென்று பெயர். அங்கு அவ்விசேஷம் தனது சித்தியில் தானே பிரமாணமாயின் ஆத்மாசிரயதோஷமுண்டாம். அவ்வாத்மாசிரயமானது தனது அதிகரணத்தன்மையில் தனது அபேக்ஷை, தனது உணர்ச்சியில் தனது அபேக்ஷை, தனது உற்பத்தியில் தனது அபேக்ஷை, தனது சுவாமித்தன்மையில் தனது அபேக்ஷை, தனது உவமையில் தனது அபேக்ஷை என்னும் பேதத்தால் பலவகைத்தாம். இவ்வாறே சொல்லப்படும் இதரேதராசிரயம் சக்கிரிகை என்பவற்றிற்கும் பலவகைகளைத் தெரிந்துகொள்க. [௩] அந்த விசேஷத்தில் வேறு இரண்டாவது விசேஷம் பிரமாணமாமெனின் அவ்விரண்டாவது விசேஷத்தில் பிரமாணம் யாது? அங்கு அவ்விரண்டாவது விசேஷத்தில் அவ்விரண்டாவது விசேஷமே பிரமாணமா? அல்லது முதல் விசேஷம் பிரமாணமா? இரண்டாவது விசேஷமே யெனும் முதற்பக்ஷத்தில் முன்போல ஆத்மாசிரயவடிவதோஷத்தி னடைவுண்டாம். முதலாவது விசேஷ மென்னும் இரண்டாவது பக்ஷத்தில் இதரேதராசிரயதோஷத்தின் அடைவுண்டாகும். அங்கு இரண்டற்கு ஒன்றற்கொன்றுள்ள அபேக்ஷை எதுவோ அது இதரேதராசிரய மெனப்படும். இதனையே அந்நியோந்நியாசிரய மென்பர். எங்ஙனம்: பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்குத் தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தின் அபேக்ஷை யுளது. அவ்விரண்டாவது விசேஷத்திற்குத் தனது சித்தியில் முதல் விசேஷத்தின் அபேக்ஷை யுளது. இஃது இதரேதராசிரயம். [௪] அவ்விரண்டாவது விசேஷத்தில் மூன்றாவது விசேஷம் பிரமாணமெனின், அம்மூன்றாவது விசேஷத்தில் அம்மூன்றாவது விசேஷமே பிரமாணமா? அல்லது அவ்விரண்டாவது விசேஷம் பிரமாணமா? அல்லது அம்முதல்விசேஷம் பிரமாணமா? அதில் மூன்றாவது விசேஷம் பிரமாணமா மென்னும் முதற்பக்ஷத்திலோ முன்போல ஆத்மாசிரயதோஷத்தின் அடைவுண்டாகும், இரண்டாவது விசேஷம் பிரமாணமா மென்

னும் இரண்டாவது பக்ஷத்தில் முன்போல அந்நியோந்நியாசிரயதோஷத்தின் அடைவுண்டாகும். முதல்விசேஷம் பிரமாணமா மென்னும் மூன்றாவது பக்ஷத்தில், சக்கிரிகாதோஷத்தின் அடைவுண்டாகும். அங்கு முந்தியதற்கு அபேக்ஷிக்கப்பட்டது இடைப்பட்டதாம். அவ்விடைப்பட்டதற்கு அபேக்ஷிக்கப்பட்டது பிந்தியதாம். அப்பிந்தியதற்குள்ள முந்தியதின் அபேக்ஷையாதோ அது சக்கிரிகாதோஷ மெனப்படும். அஃது இப்பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்குத் தனது சித்தியில் இரண்டாவது விசேஷம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அவ்விரண்டாவது விசேஷத்திற்குத் தனது சித்தியில் மூன்றாவது விசேஷம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அம்மூன்றாவது விசேஷத்திற்குத் தனது சித்தியில் முதல் விசேஷம் அபேக்ஷிக்கப்படுகின்றது. இதற்கே சக்கிரிகை யென்று பெயராம். [ரு] மூன்றாவதில் முதல் விசேஷத்தைப் பிரமாணமாகக் கொள்ளாது மூன்றாவதற்கு நான்காவதும் நான்காவதற்கு ஐந்தாவதுமாக இவ்வாறே மேலுமேலும் முன் முன் விசேஷங்கட்குப் பின் பின் விசேஷங்களைப் பிரமாணமாகக்கொள்ளின் அநவஸ்தாதோஷத்தின் அடைவு உண்டாகும். அங்கு முன் முன்னுள்ளவற்றிற்குப் பின் பின்னுள்ளவற்றின் அபேக்ஷிக்கப்படுந்தன்மை யாதோ அதற்கு அநவஸ்தை யென்று பெயர். அஃது இப்பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்குத் தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தின் அபேக்ஷையும், இரண்டாவதற்கு மூன்றாவதன் அபேக்ஷையும், மூன்றாவதற்கு நான்காவதன் அபேக்ஷையும், நான்காவதற்கு ஐந்தாவது விசேஷத்தின் அபேக்ஷையுமா மென்று இவ்வாறு முன் முன் விசேஷத்திற்குப் பின் பின் விசேஷத்தின் அபேக்ஷையை யங்கீகரித்தலில் அநவஸ்தையின் அடைவுண்டாகும். [சு] அங்கு அவ்வைந்தாவது விசேஷம் தானே பிரமாண மாகின்றது. இதனால் தனது சித்தியில் அந்நியவிசேஷத்தின் அபேக்ஷையைச் செய்கிறதில்லை. ஆதலால் முற்கூறிய அநவஸ்தாதோஷத்தின் அடைவு உண்டாகிறதில்லை என்று வாதி சங்கிக்கின், அச்சங்கையினைப் பிரதிபந்தி வடிவ தர்க்கத்தால் நிவிருத்தி செய்யவேண்டும். அங்கு வாதி பிரவாதிக ளிருவர்பக்ஷத்திலு முள்ள சங்கைசமாதானங்களின் சமத்துவம் எதுவோ அதற்குப் பிரதிபந்தி என்று பெயர். அஃது

இப்பிரசங்கத்தில் ஐந்தாவது விசேஷத்திற்கு எப்படித் தானே பிரமாணமாந்தன்மை யுளதோ, அப்படியே முதல் விசேஷத்திற்கும் தானே பிரமாணமாந்தன்மை பொருந்துகின்றதாகலின், இரண்டாவது விசேஷம் பிரமாணமாதலை யங்கீகரித்தல் பயனின்றியதாம்; வியாமகத்தினது அபாவத்தின் சாமக்கிரி இரண்டிலும் சமானமா யிருத்தலின். எங்குச் சமானசாமக்கிரி யுளதோ அங்குக் காரியமும் சமானமேயாம். எங்ஙனம்: சமான சுபாவமுடைய தந்துமுதலிய காரணங்களில் படமுதலியகாரியமும் சமானமேயாம். அவ்வாறு அவ்வைந்தாவது விசேஷத்தினது தானே பிரமாணமாந்தன்மையில் யாதொரு பரிகாரவடிவ விசேஷத்தினைக் கற்பனைசெய்யின், அப்பரிகாரத்திற்கும் முற்கூறிய விதமாக அவ்வைந்தாவதும் முதலாவதுமாகிய இரண்டு விசேஷங்களிலும் சமானத்துவமே யுண்டாகும். இத்தன்மையான இரண்டு பக்ஷங்களிலுமுள்ள சங்கைசமாதானங்களின் சமத்துவம் எதுவோ அது பிரதிபந்தி யெனப்படும். [௭] அங்கு முற்கூறிய அநுமானத்தினால் சர்வ ஜகத்தின் கர்த்தாவடிவத்தால் ஒரு ஈசுவரனது சித்தி செய்யப்பட்டது. அதில் வாதியானவன் இப்பிருதிவிமுதலிய மகாஸ்தூலகாரியத்திற்கு ஒரு கர்த்தா எப்படிச் சித்திப்பான்? நாநா ஈசுவரர் சித்திப்பர் என்று சங்கிக்கின், அச்சங்கை கல்பனுலாகவமென்னும் தர்க்கத்தால் நிவிருத்தியாகின்றது. காரியத்தை யுண்டுபண்ணுதலின் சாமர்த்தியமுள்ள வஸ்துவின் அற்பத்தன்மையைக் கற்பித்தல் எதுவோ அதற்குக் கல்பனுலாகவம் என்று பெயர். அஃது "இப்பிரசங்கத்தில் சகல ஜகத்தின் கர்த்தாவடிவமாகக் கற்பிக்கப்பட்ட ஈசுவரன் எவரோ அவரை ஒருவராக அங்கீகரிக்கின் கல்பனுலாகவமாம். அவ்வீசுவரனுக்கு ஒருமையைக் கற்பிக்காவிடின் அக்கல்பனுலாகவம் உண்டாகாது. ஏனெனின், எங்கு ஒரேவஸ்துவினால் காரியசித்தியுண்டாகக்கூடுமோ, அங்கு அவ்வொன்றனைக் கற்பிக்காவிடின் கல்பனுலாகவத்தின் பயனுடைமை யுண்டாகாது. எங்ஙனம்: கன்னிகைக்கு ஒரே வரனால் காரியசித்தி யுண்டாகக்கூடும். அக்கன்னிகைக்கு ஒருவரனைக் கற்பிக்காவிடின் கல்பனுலாகவத்தின் சார்த்தகத்தன்மை (பயனுடைமை) உண்டாகிறதில்லை." இது கல்பனுலாகவம். [௮] காரியத்தைச்

சித்திக்கச் செய்யும் ஒரு சாமர்த்தியமுள்ள வஸ்து இருக்கவும், அநேக வஸ்துக்களைக் கற்பிக்கின் கல்பனுகௌரவத்தின் அடைவுண்டாகின்றது. காரியஞ்செய்தலிற் சாமர்த்தியமுள்ள காரணத்தின் அற்பத்தினைக் கற்பியாமை எதுவோ அது கல்பனுகௌரவமாம். எங்ஙனம்: கன்னிகைக்கு ஒரு சாமர்த்தியமுடையவரன் சித்தித்திருக்கவும், அநேகவரர்களைக் கற்பித்தலில் கல்பனுகௌரவ முண்டாகின்றதோ, அதுபோல சகல ஜகத்தையுமுண்டுபண்ணுவதிற் சாமர்த்தியமுள்ள ஒரு ஈசுவரனாலேயே சகல ஜகத்தின் உற்பத்தியும் சித்திக்கவும், அநேக ஈசுவரர்களைக் கற்பித்தலில் கல்பனுகௌரவமே கிடைக்கின்றது. [கூ] ஈசுவரன் சரீரமின்றி யிருத்தலால் அவ்வீசுவரனிடத்துக் கர்த்திருத்தன்மையே சித்திக்கிறதில்லை யெனின், சகல ஜகத்திற்கும் கர்த்தாவாதற்றன்மை அவ்வீசுவரனிடத்து எவ்வாறு சம்பவிக்கும்? என்று வாதி சங்கிக்கின், அதன் நிவிருத்தி உத்ஸர்க்கவடிவதர்க்கத்தால் நிவிருத்தியாகின்றது. அங்கு மறுபடியும் மறுபடியும் காண்டற்கு உத்ஸர்க்க மென்று பெயர். எங்ஙனம்; எங்கு எங்குச் சேதனத்துவ முளதோ அங்கங்குக் கர்த்திருத்துவ முளது. எங்ஙனம் குயவன் கைக்கோளன்முதலியோர்களிடத்துச் சேதனதுவ மிருத்தலால் கடபடாதிகாரியங்களின் கர்த்திருத்துவமு முளதோ, அங்ஙனமே ஈசுவரனிடத்தும் அந்தச் சேதனத்துவதர்ம மிருத்தலால் அந்த ஜகத்காரணத்தன்மை பொருத்தப்படும். ஒருகால் அவ்வீசுவரனிடத்து அக்கர்த்திருத்துவம் பொருத்தபபடவில்லையாயின், அவ்வீசவரனிடத்து அச்சேதனத்தனமையும் நிகழாது. எங்ஙனம் கடமுதலியவற்றில் அக்கர்த்திருததன்மை அசம்பாவிதமா யிருத்தலால் சேதனத்தன்மையுமிலலேயோ, அதுபோல ஈசுவரனிடத்தும் கர்த்திருத்துவம் பொருத்தப்படவில்லை யெனின், அவ்வீசுவரனிடத்துச் சேதனத்தன்மையும் நிகழாது. [சo] எங்ஙனம் எம்மையுள்ளிட்ட ஜீவர்களிடத்து அச்சேனத்தன்மையால் கர்த்திருத்தன்மையின் நிச்சயமே யுண்டாகிறதோ, அதுபோல அவ்வீசுவரனிடத்தும் அச்சேதனத்தன்மையால் கர்த்திருத்துவத்தின் நிச்சயமே ஏன் உண்டாகாது? அச்சேதனத்தன்மையினுல் கர்த்திருவத்தினைப் பொருத்துவதற்கு ஒரு பிரயோஜனமு மில்லை என்று வாதி சங்

கிக்கின், அதன் நிவிருத்தி அபவாதவடிவதர்க்கத்தா லுண்டாகின்றது. அங்கு அம்முற்கூறிய உத்ஸர்க்கத்திற்கு யாதாலுமோரிடத்துள்ள பாதம் எதுவோ அதற்கு அபவாதம் என்று பெயர். எங்ஙனம்: முக்தரிடத்து அச்சேதனத்தன்மை யிருந்தும் அக்கர்த்திருத்துவ மில்லை. ஒருகால் சேதனத்தன்மையால் கர்த்திருத்தன்மையின் நிச்சயமே உளதாகுமாயின், அம்முக்தபுருஷர்களிடத்தும் அச்சேதனத்தன்மையால் கர்த்திருத்தன்மையின் நிச்சயம் உளதாதல் வேண்டும். முக்தபுருஷர்களிடத்தில் அச்சேதனத்தன்மை யுளதாகவும் அக்கர்த்திருத்தன்மை இருப்பதில்லை. ஆதலால் அம்முக்தபுருஷர்களிடத்து அம்முற்கூறிய உத்ஸர்க்கத்திற்கு அபவாத முளது. எதற்கு எங்கு அபவாத முளதாகின்றதோ அதனுல் அவ்வர்த்தத்தின் நிச்சய முண்டாகிறதில்லை. எங்ஙனம்: பிரமேயத்தன்மையினுல் அநித்தியத்தன்மையின் நிச்சய முண்டாகிறதில்லை. ஆதலால் அச்சேதனத்தன்மையினுல் அவ்வீசுவரனிடத்தில் கர்த்திருத்தன்மையின் பொருத்த முண்டாகிறது; கர்த்திருத்தன்மையின் நிச்சய முண்டாகிறதில்லை. இது அபவாததோஷமாம். [கக] ஈசுவரனிடத்து அம்முற்கூறிய அவ்வநுமானப்பிரமாண மிருக்குக. ஆனுல் அவ்வீசுவரசாதகப் பிரமாணத்தில் பிரமாணம் யாது? அவ்வாறே அப்பிரமாணத்தின் சாதகமான பிரமாணத்திலும் பிரமாணம் யாது? என்றிவ்வாறு சங்கை யுண்டாக, அதன் நிவிருத்தி வையாத்தியவடிவ தர்க்கத்தினு லுண்டாகின்றது. அங்குச் சமாதானஞ் செய்ய முடியாத வாதியினது பிரசினங்களின் பரம்பரை எதுவோ அது வாய்த்தபோது உள்ள மௌனத்திற்கு வையாத்தியமென்று பெயர். அங்கு எந்த ஸ்தலத்தில் வாதியின் பிரசினபரம்பரை உத்தரஞ் சொல்லக் கூடியனவாமோ, அந்தஸ்தலத்திலேயே உத்தரஞ்சொல்லவேண்டியதாம். எங்கு அந்தப் பிரசினங்களின் பரம்பரை உத்தரஞ்சொல்லக்கூடியன வாகாவோ, அங்கு மௌனவடிவ உத்தர மின்மையே உத்தர மாகின்றது. இதற்கே வையாத்தியமென்று பெயர்.

## கூ. நிர்ணயம்.

கூ. நிர்ணயம் பிரமாணத்தின் பலமான நிச்சயவடிவினதாகிய ஞானம்.

## ௧0. வாதம்.

௧0. வாதம் தத்துவ(உண்மை)ப்பொருளை யறியும் வேட்கையுடைய புருடர்கள் இருவருள் ஒருவருக்கொருவர் உண்டாகும் வினுவிடையாகிய † கதை.

## ௧௧. ஜல்பம்.

௧௧. ஜல்பம் ஒருவரை யொருவர் வெல்லவேண்டு மென்னும் விருப்புடைய புருஷர்களது இரண்டு பக்ஷங்களையும் ஸ்தாபித்தலாகிய கதை.

## ௧௨. விதண்டை.

௧௨. விதண்டை வெல்லும் வேட்கையுடையபுருடர்களின் தமது பக்ஷத்தை ஸ்தாபித்தலில்லாக் கதை.

## ௧௩. ஏதுப்போலி.

௧௩. ஏதுப்போலி. இதனைத் தருக்கமெளமுதி யநுமானநிருபணத்திற் காண்க.

## ௧௪. சலம்.

௧௪. சலம் சொல்லுவோனுடைய கருத்துக்கு வேறான பொருளைக் கற்பித்துக்கொண்டு பழித்துரைத்தல். எங்ஙனம்: "இப்புருடன் நேபாளதேசத்திருந்து வந்தவன்; நவகம்பல முடைமையால்." என்பதில் நவகம்பல முடைமையால் என்னும் வசனத்திலுள்ள நவ என்னும் பதத்தால் கம்பலத்தில் நவத்தன்மை (புதுமை)யைப் போதித்தலில் வக்தாவு(சொல்லுவோனு)க்குத் தாற்பரியமாம்; அக்கம்பலத்தின் ஒன்பது என்னும் சங்கையைத் தெரிவிப்பதில் தாற்பரிய மில்லை. அச்சொல்லுவோனது கருத்துக்கு வேறான ஒன்பதெனுந்தன்மைச் சங்கைவடிவ பொருளைக்கற்பித்துக்கொண்டு அவ்வக்தாவை நோக்கி,"இத்தரித்திர முள்ள புருஷனிடத்து ஒன்பது கம்பல மில்லை; ஒரே கம்பல மிருக்கிறது." என்று இவ்வாறு பழித்துரைத்தல். அது வாக்சலம், சாமானியசலம், உபசாரசல மென்று மூவகைத்தாம்.

---

† நாநாவக்தாக்களையுடைய பூர்வபக்ஷ உத்தரபக்ஷப்பிரதிபாதகமான வாக்கியசந்தர்ப்பம் கதை யெனப்படும்.

அவற்றுள்,

(க) எப்பதத்திற்கு இரண்டு சக்கியார்த்தங்கள் சம்பவிக்கின்றனவோ, அவற்று ளொன்றை நிச்சயஞ்செய்யும் விசேஷமின்மையால் வக்தாவின் கருத்துக்கு வேறான சக்கியார்த்தத்தைக் கற்பித்துக்கொண்டு அவனைப் பழித்துரைத்தல் வாக்சலமாம். எங்ஙனம்: முற்கூறிய உதாரணத்தில் நவ வென்னும் சொல்லிற்குப் புதுமையும் சக்கியார்த்தமாம். ஒன்பதெனுந்தன்மைச் சங்கையும் சக்கியார்த்தமாம். அங்கு வக்தாபுருஷனுக்கு அந்த நவபதத்தின் நவீனத்தன்மைவடிவ அர்த்தத்தில் தாற்பரியமாம். ஒன்பதெனுந்தன்மைச் சங்கையில் தாற்பரிய மில்லை. அந்த நவபதத்தில் ஒன்பதெனுந்தன்மைச் சங்கைவடிவ அர்த்தத்தைக் கற்பித்துக்கொண்டு அவ்வக்தாவை நோக்கிப் பழித்துரைத்தல் வாக்சலம்.

(உ) சாமானியத்தோடுகூடியதும் சம்பவிப்பதுமான பொருளின் தாற்பரியத்தால் சொல்லப்பட்ட வசனத்திற்கு அதிசாமானியயோகத்தால் சம்பவியாத அர்த்தமுடைமையைக் கற்பித்துக்கொண்டு அவ்வக்தாபுருஷனை நோக்கிப் பழித்துரைத்தல் சாமானியசலமாம். எங்ஙனம்: ஒரு புருஷன் "இப்பிராஹ்மணன் வித்தியாசரணத்தோடுகூடியவன்" என்னும் வசனத்தைக் கூறினான். அதனைக் கேட்டு ஓர் புருஷன் இவ்வக்தாபுருஷன் பிராஹ்மணத்தன்மை ஏதுவைக் கொண்டு வித்தியாசரணத்தைச் சித்திக்கச் செய்கிறான் என்று இவ்வாறு கற்பித்துக்கொண்டு, அவ்வக்தாபுருஷனை நோக்கி, "பிராஹ்மணத்தன்மைவடிவ ஏதுவைக் கொண்டு வித்தியாசரணத்தின் சித்தி சம்பவியாது; உபநயனசம்ஸ்கார மின்றிய விராத்தியப்பிராஹ்மணனிடத்து அந்தப் பிராஹ்மணத்தன்மை யிருந்தும் வித்தியாசரண மின்மையே காணவருதலின்." என்று கூறுகின்றான். இது சாமானியசலம்.

(ங) சக்திவிருத்தியினாலாவது லக்ஷணாவிருத்தியினாலாவது பிரயோகஞ்செய்த சப்தத்தில் அதனினும் வேறான விருத்தியினால் நிஷேதித்தல் உபசாரசலமாம். எங்ஙனம்: மஞ்சபதத்திற்கு மஞ்சத்துள்ள புருஷனிடத்து இலக்ஷணாவிருத்தியின் அபிப்பிராயத்தினால் உச்சரிக்கப்பட்ட மஞ்சம் கூப்பிடுகின்றது என்னும் வாக்கியத்தில் மஞ்சபதத்திற்கு மஞ்சத்தில் சக்திவிருத்தி

யினைக் கொண்டு, கேட்கும் புருஷன் சொல்லும் புருஷனை நோக்கி "மஞ்சத்துள்ள புருஷன்றான் சப்திக்கின்றான்; எம்மஞ்சமும் சப்தியாது." என்று நிஷேதிக்கிறான். இவ்வாறு யான் என்னும் சொல்லிற்கு ஆத்மாவினிடத்துச் சக்திவிருத்தியின் அபிப்பிராயத்தால் உச்சரிக்கப்பட்ட யான் நித்தியன் என்னும் சப்தம் எதுவோ அந்த யான் என்னும் சொல்லிற்குச் சரீரத்தினிடத்து இலக்ஷணாவிருத்தியினைக் கற்பித்துக்கொண்டு, கேட்கும் புருஷன் சொல்லும் புருஷனை நோக்கி, இன்ன பிதாமாதாக்களினின்றுண்டாகிய நீ எப்படி நித்தியனாவாய் என்று நிஷேதிக்கின்றான், இஃது உபசாரசலம்.

## கரு. ஜாதி.

கரு. ஜாதி அசதுத்தரம் (போலியுத்தரம்). அது சாதர்மியசமைமுதலாக இருபத்துநான்காம். அவை வருமாறு:—

(க) * சாதர்மியத்தினைக் கொண்டு (காரியமான சாத்தியத்தை) ஸ்தாபிக்கும் (பக்ஷத்தில் சித்திக்கச்செய்யும்) ஏதுவைத் தூஷிக்கும் உத்தரம் ‡ (பிரதிபந்திவடிவினதாகிய) சாதர்மியசமையாம். எங்ஙனம்:—" ஆத்மா கிரியையுடையதாம்; கிரியைக்குக் காரணமான குணமுடைமையால்; எந்தெந்தத் திரவியம் கிரியைக்குக் காரணமான குணமுடையதோ அந்தந்தத் திரவியம் கிரியையுடையதேயாம், மண்ணாங்கட்டிபோல்." என்பது. இதில் கிரியையையுண்டுபண்ணும் வாயுசையோக† முதலியனவே கிரியைக்குக் காரணமான குணங்களாம் என்று ஓர் வாதியானவன் ஆத்மாவினிடத்துக் கிரியையோடுகூடியதன்மையினை ஸ்தாபித்தான். அவ்வாதியை நோக்கி மற்றோர் வாதி உத்தரம் கூறுகின்றான்:—ஒருகால் கிரியையுடைய மண்ணாங்கட்டியின் சாதர்மியத்தால் ஆத்மா கிரியையுடையதாமாயின், அப்போது

* சமானதர்மம் (ஒத்த இயல்பு) எதற்கு இருக்கிறதோ அது சமானதர்மாவாம். அதன்றன்மை சாதர்மியமாம்.

‡ பிறன்கொள்கையாகிய சமாதானத்தைப் பயக்கும் விடை பிரதிபந்தியுத்தரம்.

† முதலியன வென்பதனால் வேகம் கொள்ளப்படும்.

$ ஆகாயமுதலிய விபுத்தன்மைவடிவ நிஷ்கிரியத்திரவியங்களின் சாதர்மியத்தால் அவ்வாத்மா வன் நிஷ்கிரியமே யாகாது. இதில் ஓர் விநிகமகமு மில்லை. (இரண்டு பக்ஷங்களில் ஒன்றைச் சாதிக்கும் யுக்தி விநிகமகம்.) இத்தன்மைய உத்தரத்திற்குச் சாதர்மியசமையாகிய ஜாதி யென்று பெயர்.

(உ) * * வைதர்மியத்தினைக்கொண்டு ஸ்தாபிக்கும் ஏதுவைத் தூஷிக்கும் உத்தரம் (பிரதிபந்திவடிவினதாகிய) வைதர்மியசமை யெனப்படும். எங்ஙனம்:—முற்கூறப்பட்ட (ஸ்தாபித்தலாகிய) அநுமானத்திலேயே ஒருவன் இத்தன்மையான உத்தரம் கூறுகின்றான்:— ஒருகால் அந்தக்கிரியையுடைய மண்ணுங்கட்டியின் சாதர்மியத்தால் அவ்வாத்மா கிரியையுடையதாமாயின், அம்மண்ணுங்கட்டியின் விபுத்தன்மைவடிவ வைதர்மியத்தால் ஏன் நிஷ்கிரியமே யாகாது? அங்கு அம்மண்ணுங்கட்டியின் சாதர்மியத்தால் ஆத்மா கிரியையுடையதே யாகவேண்டும்; ஆனால் அம்மண்ணுங்கட்டியின் ‡ வைதர்மியத்தால் அவ்வாத்மா நிஷ்கிரியமாகலாகாது என்னும் அர்த்தத்தில் ஓர் நியாமகமு மில்லை. (நியாமகம் உறுதிப்படுத்துவது.) இத்தன்மைய உத்தரத்திற்கு வைதர்மியசமையாகிய ஜாதி யென்று பெயர்.

(ங) பிறன் கூறிய சாதனத்தி(ஏதுவி)னாலேயே அதனை வியாபியாத (பிறன் கூறிய ஏதுத்தன்மை வியாபக) தர்மத்தினைப் பக்ஷத்தில் சம்பாதித்தல் உத்கர்ஷசமையாம். எங்ஙனம்:—"ஒருவன் கூறும் சப்தம் அநித்தியம்; காரியமா யிருத்தலால்; கடம்போல." என்னும் இவைமுதலியவற்றில் மற்றொருவன் அப்படியாயின் அக்காரியமா யிருத்தலால் என்னும் ஏதுவினாலேயே சப்தம் கடம்போல சாவயமு (அவயவமுடையது)மாம் என்று உத்தரம் கூறுகின்றான். இவ்வுத்தரத்தினையே உத்கர்ஷ (உயர்ச்சி) சமையாகிய ஜாதி யென்பர்.

---

$ ஆகாயவடிவ திருஷ்டாந்தத்துள்ள கிரியையோடுகூடியவடிவ தர்மத்திற்குச் சமானமான விபுத்தன்மைவடிவ தர்மமுடைமையால் என்பது பொருள்.

* * விருத்ததர்மம் (வேற்றியல்பு) எதற்கு இருக்கிறதோ அது விதர்மாவாம். அதன்றன்மை வைதர்மியமாம்.

‡ கிரியையுடைமைவடிவ தர்மவிருத்தமான விபுத்தன்மைவடிவ தர்மத்தால் என்பது பொருள்.

(௪) பிறன்கூறிய திருஷ்டாந்தசாதர்மியத்தால் (திருஷ்டாந்தத்துள்ள தர்மசமமான தர்மத்தால்) பக்ஷத்தில் அவன் அபிப்பிராயப்பட்ட தர்மாந்தர(வேறு தர்ம)த்தின் அபாவத்தைச் சாதித்தல் அபகர்ஷசமையாம். எங்ஙனம்:- முற்கூறிய அவ்வநுமானத்திலேயே "காரியமா யிருத்தலால் சப்தம் கடம்போல அநித்தியமாமாயின், அதனாலேயே சப்தம் கடம்போல சிரவணம் செய்யப்படாததாம்" என்று கூறுதல். இவ்வுத்தரத்தினை அபகர்ஷ(தாழ்ச்சி) சமை என்பர்.

(௫) வர்ணிக்கத்தக்கதான ஸ்தாபிக்கப்படும் திருஷ்டாந்ததருமத்தினை(திருஷ்டாந்தத்துள்ள வேறுதர்மத்தினை)ப் பக்ஷத்தில் சாதித்தல் வர்ணியசமையாம். எங்ஙனம்:—முற்கூறிய அநுமானத்தில் கிரியையையுண்டுபண்ணும் * நோதனமென்னும் சையோகமுடைமையால் மண்ணாங்கட்டி முதலியவற்றிற்குக் கிரியையுடைமை நிகழுக. ஆத்மாவின் கிரியையுடைமையிலோ அந்தக்கிரியையை யுண்டுபண்ணும் நோதனமெனப்படும் சையோகமுடைமையுமுளதாதல்வேண்டு மென்று கூறுதல். இது வர்ணிய(புகழ்ந்துரைச்)சமை.

(௬) சாத்தியவஸ்துக்களிலுள்ள இரண்டு தர்மங்களுக்கும் பக்ஷத்தில் சமானத்தன்மையினைச் சாதித்தல் அவர்ணியசமையாம். எங்ஙனம் :—அவ்வநுமானத்திலேயே "(வர்ணியசமையில்) மண்ணாங்கட்டிமுதலியவற்றின்கணுள்ள நோதனமுதலியவடிவக்கிரியைக்குக் காரணமான குணமுடைமை ஆத்மாவினிடத்துச் சித்திக்கவில்லை. ஆகவே சமானத்தன்மையால் எப்படிச் சித்தியாததான கிரியைக்குக் காரணமாகிய குணத்தினால் ஆத்மாவினிடத்துக் கிரியையுடைமை சாதிக்கப்படுகின்றதோ, அதுபோல அத்தன்மையாகிய கிரியையுடைமையால் † அந்தக்கிரியையை யுண்டுபண்ணும் குணமுடைமையும் ஏன் சாதிக்கப்படாது; நியாமக மின்மையால்." என்று கூறுதல். இஃது அவர்ணியசமை.

---

* இதனைத் தருக்ககௌமுதியில் சையோககுணங்கூறியவிடத்துக் காண்க.

† கிரியையையுண்டுபண்ணும் நோதனமென்னும் சையோகவடிவகுணமுடைமையும் என்பது பொருள். அதன்றன்மையும், "ஆத்மா நோதனமென்னும் குணமுடையதாம்; கிரியையுடைமையால்; மண்ணாங்கட்டிபோல." என்பதாம்.

(எ) திருஷ்டாந்தவிகற்பத்தினைக் காட்டித் தார்ஷ்டாந்திகத்துள்ள விகற்பத்தினைக் கூறுதல் விகற்பசமையாம். எங்ஙனம் :— * அவ்வநுமானத்திலேயே "கிரியைக்குக் காரணமான குணத்தோடுகூடியது சில குருவாம் (கனமுடையதாம்)மண்ணாங்கட்டிமுதலியவற்றைப்போல, சில இலகுவாம் வாயுவினைப்போல, இவ்வாறு கிரியைக்குக் காரணமான குணமுடையது சில ** மண்ணாங்கட்டிமுதலியவற்றைப் போலக் கிரியையுடையதாம். † சில அக்கிரியமாம் ஆத்மாவினைப் ‡ போல. (ஏதுவில்) முந்திய விகற்பம் நிகழும் இதுவோ நிகழாது என்பதில் என்ன நியாமக முளது ?" என்பது. இது விகற்பசமை.

(ஐ) திருஷ்டாந்தத்திற்குப் பக்ஷதுல்யத்தன்மையைக் கூறுதல் சாத்தியசமைபாம். இங்குச் சாத்திய மென்றது பக்ஷத்தினை யென்று கொள்க. எங்ஙனம் :—முற்கூறிய அநுமானத்திலேயே எப்படி மண்ணாங்கட்டியோ அப்படி ஆத்மா என்று உன்னாற் சொல்லப்படின், அப்போது "எப்படி ஆத்மாவோ அப்படி மண்ணாங்கட்டி" *† என்பதும் வந்தது. அவ்வாறே "ஆத்மாவினிடத்துக் கிரியையுடைமை சாதிக்கப்படுமாயின் மண்ணாங்கட்டியிலும் அது சாதிக்கத்தக்கதாம்." இல்லையாயின் "எப்படி மண்ணாங்கட்டியோ அப்படி ஆத்மா" வென்று சொல்லலாகாது. மண்ணாங்கட்டியை யொத்தது ஆத்மா, ஆத்மாவை யொத்தது

---

* கிரியையைச் சாதிக்கும் கிரியைக்குக் காரணமான குணமுடைமையாகிய ஏதுவினையுடைய அநுமானத்திலேயே என்பது பொருள்.

** திருஷ்டாந்தத்திற்குத் தார்ஷ்டாந்திகத்தன்மை பொருந்தாமையால் இது சம்பவியாதென்று சொல்லுதல் கூடாது; வாயுவினுக்குத் திருஷ்டாந்தத்தன்மையை யங்கீகரிக்க இதற்குத் தார்ஷ்டாந்திகத்தன்மை உசிதமாகுதலின்.

† கிரியையின்றிய மண்ணாங்கட்டி திருஷ்டாந்தத்தினால் சில தார்ஷ்டாந்திகம் கிரியையில்லாதனவா மென்பது பொருள்.

‡ இங்குப் போலவெனுஞ் சொல் தார்ஷ்டாந்திகத்தினைக் குறிப்பதெனக் கொள்க.

*† எப்படி யென்னும் சொல் ஒன்றற்கொன்று சாதிருசியார்த்தத்தை யறிவிப்பதா யிருத்தலா லென்பது கருத்து.

மண்ணாங்கட்டி யன்று என இங்கு * ‡ நியாமக மின்மையால்.'' என்பது. இது சாத்தியசமை.

(கூ) பிராப்தியினால் அதாவது சாத்திய ஏதுக்களின் ‡ சாமானாதிகரணியத்தால் பிரத்தியவஸ்தானம் (சாத்தியசித்தி) பிராப்திசமையாம். எங்ஙனம்:—அவ்வநுமானத்திலேயே கிரியைக்குக் காரணமான குணமுடைமையினாலேயே கிரியையுடைமை சாதிக்கப்படுவதென்னை? கிரியையுடைமையால் அத்தன்மைய குணமுடைமை சாதிக்கப்படாததென்னை? இரண்டற்கும் விசேஷ (பேத) மின்மையால். இது பிராப்திசமை.

(க0) அப்பிராப்தியினால் சாத்தியசித்தி அப்பிராப்திசமையாம். எங்ஙனம்:— ''அவ்வநுமானத்திலேயே * முற் கூறிய தோஷத்தினால் அடையப்படாத (ஓர்) ஏதுவிற்குச் சாத்தியத்தைச் சாதிக்குந்தன்மை சொல்லத்தக்கதாம். ஆகவே அப்பிராப்தத்தன்மையான அவிசேஷத்தினால் அவ்வெல்லாம் எல்லாவற்றையுஞ் சாதிக்கும் என்னும், அல்லது இவ்வேதுவே சாத்தியாபாவத்தினை ஏன் சாதிக்காது என்னும் இதில் விநிகமகமின்மையால்.'' என்பது. இஃது அப்பிராப்திசமை.

(கக) சாதனபரம்பரையினைப் பிரசினஞ்செய்தல் பிரசங்கசமை. எங்ஙனம்:— ''கிரியையுடைமையில் கிரியைக்குக் காரணமான குணமுடைமை சாதனம். அதில் (கிரியாஹேதுகுணமான அச்சாதனத்தில்) சாதனம் யாது? சாதனமின்றி எதுவும் சித்தியாதாகலின். இவ்வாறே அதிலும் சாதனம் யாது? என்னுமிவை முதலியன பிரசங்கசமை.

(கஉ) வேறு திருஷ்டாந்தத்தால் சாத்தியாபாவத்தைச் சாதித்தல் பிரதிதிருஷ்டாந்தசமை. எங்ஙனம்:— அதிலேயே (ஆத்மாவிலேயே) மண்ணாங்கட்டிதிருஷ்டாந்தத்தால் (கிரியா

---

* ‡ சப்தசக்தியின் இயற்கையால் 'எப்படி' யெனும் சொல்லால் ஒன்றற்கொன்று சாதிருசியம் அறிவிக்கப்படுகின்றது. இவ்வாறு ஒன்று மிஞ்சுதலில் காரணமின்மையால் என்பது கருத்து.

‡ சாமானாதிகரணியம் ஒரிடத்திருத்தல்.

* பிராப்திசமாவடிவ தோஷத்தினால் ஏதுவிற்குச் சாத்தியத்தைச் சாதிக்குந்தன்மை யின்மையால் என்பது கருத்து.

ஹேதுவான குணமுடைமையாகிய ஏதுவினால்) கிரியையுடைமை சாதிக்கப்பட்டபோது நிஷ்கிரியவாகாசதிருஷ்டாந்தத்தினால் (விபுத்தன்மை ஏதுவால்) ஆத்மாவிற்கு நிஷ்கிரியத்தன்மையே ஏன் சாதிக்கப்படமாட்டாது? "மண்ணாங்கட்டி திருஷ்டாந்தத்தினால் கிரியையுடைமை நிகழும். ஆகாசதிருஷ்டாந்தத்தால் நிஷ்கிரியத்தன்மை நிகழாதென்பதில் நியாமக மின்மையால்." என்பது பிரதிதிருஷ்டாந்தசமை.

(கஙு) அநுத்பத்தியால் சாத்தியசித்தி அநுத்பத்திசமை. எங்ஙனம்:— "கடம் நித்திய மன்று; ஜந்நிய ஒருமையால்." என்னும் இவைமுதலியவற்றில் ஒருவன் கூறுகிறான்:—ஜந்நிய ஒருமை அநித்தியத்தன்மையிற் பிரமாணமாயின், அப்போது கடத்தில் ஒருமையுற்பத்திக்குமுன் அஃது (ஜந்நியவொருமை வடிவ ஏது) இன்மையால் அதற்கு நித்தியத்துவ முண்டு. நித்தியமாயின் அப்போது உத்பத்தியாகாததேயாம். இஃது அநுத்பத்திசமை.

(கச) சாதாரணதர்மத்தினைக் காட்டிச் சம்சயத்தினை எழுப்புதல் சம்சயசமை. எங்ஙனம்:— "சப்தம் அநித்தியம் காரியத்தன்மையால் என்னு மிவைமுதலியவற்றில் சப்தத்திற்கு அநித்தியமான கடத்தோடு (அநித்தியசொரூபவேதுவால்)காரியத்தன்மைவடிவசாதர்மியம் எவ்வா றுளதோ, அவ்வாறே நித்தியமாகிய சத்தத்தன்மையோடுகூட (நித்தியத்தன்மைவடிவ ஏதுவால்) சிராவணப்பிரத்தியக்ஷத்திற்கு விஷயமா(செவிக்குப்புலனா)ந்தன்மையாகிய சாதர்மியமு முளது என்று உபயசாதர்மியம் காட்டுதலால் சம்சய முண்டாகின்றது; ஒன்றைக் கழித்தலில் நியாமக மின்மையால்." என்பது சம்சயசமை.

(கரு) வாதியினாற் கூறப்பட்ட ஏதுவிற்குச் சாத்தியவிபரீதத்தினைச் சாதிக்கும் வேறு ஏதுவை எழுப்புதல் பிரகரணசமை. தர்க்ககௌமுதியிற் கூறப்பட்டுள்ள சற்பிரதிபக்ஷத்தின் உதாகரணத்தினையே இதற்கு உதாகரணமாகக் கொள்க.

(கசு) காலத்திரயத்திலும் ஏதுத்தன்மை சம்பவியாமையால் ஏதுத்தன்மையின்மையைக் கூறுதல் அஹேதுசமை. எங்ஙனம்:— "காரியத்தன்மைமுதலியவடிவ சாதனம் சாத்தியமாகிய அநித்தியத்தினும் முற்காலத்திருப்பதாயின், அப்போது

அநித்தியத்தன்மைவடிவ சாத்தியம் அக்கால(ஏதுகால)த்தின்மையால் எதனைச் சாதிப்பதாம்? இனிப் பிற்காலத்திருப்பதெனின், அப்போது முற்காலத்திற் காரியாவ்யவகித பூர்வகால சாதனமின்மையால் அநித்தியத்துவம் எதன் சாத்தியமாம் (எவ்வேதுவாற் சாதிக்கப்படுவதாம்)? இரண்டும் ஒரு காலத்திருப்பதெனின், எது எதன் சாதனமாம்? எது எதன் சாத்தியமாம்? என்று இரண்டிலொன்றைத் துணியும் யுக்தியின்மையால்.'' என்பது அஹேதுசமை.

இதனை ஹேதுசமை யென்று கூறுமிடத்திலோ முக்காலத்திலும் ஏதுத்தன்மை சம்பவியாமையைக் கூறுதலே ஹேதுசமையெனப் பொருள் கொள்க.

(கஎ) அர்த்தாபத்தியை முன்னிட்டுச் சாத்தியாபாவத்தை யெழுப்புதல் அர்த்தாபத்திசமை. எங்ஙனம்:—முற்கூறிய வநுமானத்தில் சத்தத்திற்கு அநித்தியசாதர்மியத்தால் அநித்தியத்வ முளதாயின், அப்போது அர்த்தாபத்தியாற் சித்தித்த நித்தியசாதர்மியத்தால் (நித்தியத்திருக்கும் நித்தியத்தன்மைவடிவ சமானதர்மமுடைமையால்) நித்தியத்துவமுமாம்; இரண்டிலொன்றை நிச்சயித்தலில் நியமஞ்செய்வதின்மையால் என்பது. இஃது அர்த்தாபத்திசமை.

(கஅ) சகல அவிசேஷப்பிரசங்கத்தினையும் எழுப்புதல் அவிசேஷசமை. எங்ஙனம்:—அவ்வனுமானத்திலேயே "காரியப்பாடுமுதலிய அநித்திய கடாதிகளின் சாதர்மியத்தால் சப்தத்திற்கு அநித்தியத்துவ முளதாயின், அப்போது பிரமேயத்தன்மை*முதலிய வடிவ அதன் சாதர்மியத்தால் எல்லாவற்றிற்குமே அநித்தியத்துவ முண்டாம். யான் கூறிய சாதர்மியத்தால் அது நிகழும் நீ கூறியதனால் சித்தியா தென்பதில் நியமிப்பதொன் றில்லாமையால்.'' என்பது அவிசேஷசமை.

(க௯) இரண்டுபக்ஷசாதர்மியத்தினாலும் சாதனம் பொருந்துதலைக் கூறுதல் உபபத்திசமை. எங்ஙனம்:— "அநித்தியத்

* முதலியவென்பதனால் வாச்சியத்துவஞேயத்துவமுதலியனவும் கொள்ளப்படும்.

தன்மையின் சாதனமாகிய காரியத்தன்மை பொருந்துகின்றது என்பதனால் சப்தத்திற்கு அநித்தியத்துவ முளதெனின், அப்போது நித்தியத்தன்மையின் சாதனமும் (செவிக்குப்புலனாந் தன்மைவடிவமும்) சிறிது பொருந்துகின்றது என்பதனால் நித்தியத்துவம் ஏன் உளதாகாது." என்பது உபபத்திசமை.

(உ௦) வாதியினாற் காட்டப்பட்ட சாதன மில்வழியும் சாத்திய உணர்ச்சியினைக் கூறுதல் உபலப்திசமை. எங்ஙனம்:- "சப்தம் அநித்தியம் பிரயத்தினத்தா லடையப்படுவதாகலின் கடம்போல என்றுமிடத்துப் பிரயத்தினமில்லாமலும் வாயுவின் நோதன மென்னும் சையோகவசத்தால் விருக்ஷசாகை (மரக்கிளை) ஒடிதலால் உண்டாகிய சப்தம் உணரப்படுதலின் சப்தத்தில் பிரயத்தினத்தாலடையப்படுந்தன்மை யில்லை." என்பது உபலப்திசமை.

(உ௧) வாதியினால் அநுபலப்திவசத்தால் ஓர் பதார்த்தத்தை யங்கீகரியாவிடத்து அநுபலப்திவசத்தினாலேயே வாதியினால் அங்கீகரிக்கப்பட்டுள்ள யாதானுமோர் பதார்த்தத்தின் அபாவத்தைச் சாதித்தல் அநுபலப்திசமை. எங்ஙனம்.—"ஜலமுதலியன இருப்பனவாயினும் அவற்றிற்கு ஆவரண (மறைப்பு) வசத்தால் அநுபலப்தி (தோற்றாமை) யுண்டு. அதுபோல உச்சரித்தற்கு முன் சப்தம் இருப்பதாயினும், அதற்கு ஆவரணவசத்தால் அநுபலப்தி யுண்டு என்னும் இம்மதம் (சப்தாநுபலப்திவாதிமதம்), வாதியினால் 'ஆவரணவசத்தால் சப்தம் அறியப்படவில்லையாயின், அப்போது ஜலாதியாவரணம்போல சப்தாதியாவரணமும் அறியப்படும்.' என்று தூஷிக்கப்படுகின்றது. இங்கு உத்தரம்:—தம்மால் அறியப்படாத ஆவரணவசத்தால் சப்தம் அறியப்படவில்லையாயின், அப்போது (சப்தாவரண உபலப்தி யுண்டாகாதபோது) அநுபலப்திக்கும் அநுபலப்தியபாவம் சித்திக்கவே அதன் (அநுபலப்தியின்) அபாவத்தால் ஆவரண சித்தி யுண்டாம்." என்பது அநுபலப்திசமை.

(உ௨) தர்மத்தின் நித்தியாநித்தியத்துவவிகற்பத்தால் தர்மிக்கு நித்தியத்தன்மையைச் சாதித்தல் நித்தியசமை. எங்ஙனம்:—"சப்தத்திற்கு எவ்வநித்தியத்துவம் தம்மாற் சொல்லப்

படுகின்றதோ அது (அநித்தியத்துவம்) நித்தியமா? அநித்தியமா? நித்தியமாயின் அப்போது சப்தத்திருக்கும் அதற்கே (அநித்தியத்திற்கே) என்றுமிருத்த லிருத்தலின் சப்தத்திற்கும் அப்படிப்பட்டதன்மை(நித்தியத்துவம்) வந்தது. இனி அநித்தியமாயின் அப்போது சப்தத்தில் ஒருகாலத்து அநித்தியத்துவ மில்லையென்பதனால் நித்தியமேயாம் சப்தம். இவ்வாறு இருவகையாலும் * சப்தத்திற்கு நித்தியத்துவ முண்டு." என்பது நித்தியசமை.

(உ௩) அநித்தியதிருஷ்டாந்தசாதர்மியத்தால் யாவும் அநித்தியமா மென்னும் பிரசங்கத்தை யெழுப்புதல் அநித்தியசமை. எங்ஙனம்:—"அநித்தியமாகிய கடத்தோடு சாதர்மியத்தால் சப்தம் அநித்திய மெனப்படுமாயின், அப்போது யாதேனும் ஓர் (பிரமேயத்துவாதி) தர்மத்தினால் எல்லாவற்றிற்கும் (பரமாணுமுதலிய நித்யசாமானியத்திற்கும்) அதனோடு (கடத்தோடு) ஒப்புமை யிருத்தலால் எல்லாவற்றிற்கும் அநித்தியத்துவப்பிரசங்க முண்டாம்." என்பது. இஃது அநித்தியசமை

(உ௪) வாதியினால் சொல்லப்பட்ட ஏதுவிற்கு வேறுகாரியத்தினாலும் சம்பவங்கூறுதல் காரியசமை. எங்ஙனம்:—"அதிலேயே (சப்தத்திலேயே) பிரயத்தினத்தாலடையப்படுந்தன்மை இருவகையாலும் சம்பவிக்கின்றது; கடாதிகளைப்போல, சப்தசொரூபோற்பத்தியிலும் ஜலாதிகளைப்போல மறைப்பதின் நிவிருத்தியிலும் இரண்டிடத்தும் பிரயத்தனத்தாலடையுந்தன்மை காட்டுதலால். அப்படியே அந்த மறைப்பதின் நிவிருத்திவடிவ வேறுகாரியம் (பிரயத்தனத்தால்) சம்பவித்தலால் அநித்தியத்துவம் நியத மன்று." என்பது. இது காரியசமை.

இதற்கே காரணசமை யென்னும் பெயரைக் கொள்ளுமிடத்து அதற்கும் "காரணமாகிய பிரயத்தனத்தாலடையப்படுந்தன்மையினை இரண்டிடத்தும் சப்தத்தின் உற்பத்தியிலும் அதனை மறைப்பதின் நிவிருத்தியிலும் சமத்தன்மையைக் கூறுதல்." என்றிவ்வாறு சொல்லப்பட்ட பொருளிலேயே முடிவை நிச்சயித்துக்கொள்க.

---

* வையாகரணத்வரமீமாம்ஸகர் இருவரும் கூறுகின்றனர் என்று அறியப்படுகின்றது.

## கசா. நிக்கிரகஸ்தானம்.

கசா. நிக்கிரகஸ்தானம் வாதிகளின் தோல்விக்காரணம். அது பிரதிஞ்ஞாஹானி, பிரதிஞ்ஞாந்தரம், பிரதிஞ்ஞாவிரோதம், பிரதிஞ்ஞாசந்நியாசம், ஏதுவந்தரம், அர்த்தாந்தரம், நிரர்த்தகம், அபார்த்தகம், அவிஞ்ஞாதார்த்தம், நியூனம், அதிகம், புநருக்தம், அநநுபாஷணம், அஞ்ஞானம், அப்பிரதிபை, விக்ஷேபம், மதாநுஞ்ஞை, பரியநுஜ்யோபேக்ஷணம், நிரநுயோஜ்யாநுயோகம், அபசித்தாந்தம், ஏத்வாபாசம் என இருபத்திரண்டாம். அவற்றுள், (க) முன் பிரதிஞ்ஞைசெய்த பொருளை விடுதல் அல்லது பிரதிஞ்ஞைசெய்த பொருளுக்கு விரோதமானதை யங்கீகரித்தல் பிரதிஞ்ஞாஹானி (மேற்கோளழிவு). எங்ஙனம்: "சப்தம் அநித்தியம்; பிரத்தியக்ஷகுணமா யிருத்தலின்." என்னுமிடத்து "அந்த இக்ககாரம்" என்றல்முதலிய பிரத்தியபிஞ்ஞைவலியால் பிறனால் சப்தம் நித்தியமெனப் * பாதம் எழுப்பப்பட்ட காலத்து, "அப்படியாயின் சப்தம் நித்தியமா யிருக்குக." என்று நித்தியத்தன்மையினை அங்கீகரித்து வாதி சப்தத்தின் † அநித்தியத்தன்மைப்பிரதிஞ்ஞையை விடுகிறான். இது பிரதிஞ்ஞாஹானி. (௨) பிறன் கூறிய தோஷத்தைப் பரிகரிக்கும் விருப்பால் முற்கூறப்படாத விசேஷணவிசிஷ்டத்தன்மையோடு (அடையினைக்கூட்டி) பிரதிஞ்ஞைசெய்த பொருளைக் கூறுதல் பிரதிஞ்ஞாந்தரம் (வேறுமேற்கோள்). எங்ஙனம்: "வாதி பிருதிவிமுதலியன **குணஜந்நியமாய்; காரியமா யிருத்தலின்." என்னுமிடத்துப் பிரதிவாதி அதிருஷ்டத்தாற்றோன்றிய தன்மையால் என்று ‡ சித்தசாதனத்தை எழுப்பவே, அதற்கு வாதி § விஷயத்தோடு

---

* அநித்தியத்தன்மையில் ககாரத்திற்கு நஷ்ட மிருத்தலின் பிரத்திய பிஞ்ஞாவிரோதம் எழுதப்பட்டது என்பது பொருள்.

† பிரதிஞ்ஞை செய்த பொருளுக்கு விரோதமான நித்தியத்தன்மையினையும் அங்கீகரிக்கின்றான் என்பது பொருள்.

** ஈசுவரனது ஞானம் இச்சைமுதலிய குணங்களா லுண்டாயின.

‡ அதிருஷ்டஜந்நிய மென்று முன் பெறப்பட்ட பிருதிவிமுதலியவற்றைக் குணஜந்நிய மென்று கூறுதல் சித்தசாதனமாம்.

§ இச்சைக்கு விஷயத்தோடுகூடியதன்மை யிருத்தலால் விஷயத்தோடுகூடிய இச்சாகுணஜந்நியத்துவ முளதாகவும் அதிருஷ்டத்திற்கு நிர்விஷயத்தன்மையால் சித்தசாதனம் எழுப்புதல் கூடா தென்பது கருத்து.

கூடிய தென்று குணத்திற்கு விசேஷணங்கொடுத்தல் பிரதிஞ்ஞாந்தரமாம். (௩) தன்னாற் கூறப்பட்ட சாத்தியத்திற்கு விரோதமுள்ள ஏதுவைக் கூறுதல் பிரதிஞ்ஞாவிரோதம். எங்ஙனம்: "திரவியம் குணத்தின் வேறுபட்டது; ** உருவமுதலியவற்றினும் வேறாகக் காணப்படாமையால்." என்பது பிரதிஞ்ஞாவிரோதமாம். (௪) தன்னாற் கூறப்பட்ட பொருள் பிறனால் தூஷிக்கப்பட அதனை விடுதல் பிரதிஞ்ஞாசந்நியாசம் (மேற்கோள்விடுதல்). எங்ஙனம்: "சப்தம் அநித்தியம்; இந்திரியஞான விஷயமாதலின்." என்று கூறியவிடத்து, அது பிறனால் *சாமானியத்தில் (ஜாதியில்) வியபிசாரத்தை எழுப்பித் தூஷிக்கப்பட்டகாலத்து "சப்தம் அநித்திய மென்று கூறியது யார்?" என்று தான் கூறியதை விடுகிறான். இது பிரதிஞ்ஞாசந்நியாசம். (௫) பிறனால் கூறப்பட்ட தூஷணத்தைப் பரிகரிக்கும் விருப்பால் முன் கூறப்பட்ட ஏது கோடியில் வேறு விசேஷணத்தைச் சேர்த்தல் ஏதுவந்தரம் (வேற்றேது). எங்ஙனம்: "சப்தம் அநித்தியம்; பிரத்தியக்ஷத்தன்மையால்." என்னுமிடத்துப் பிரதிவாதி சாமானியத்தில் வியபிசாரத்தினை எழுப்பியபோது ஜாதியுடையதாய் என்று (ஏதுகோடியில்) † விசேஷணங்கொடுத்தல் ஏதுவந்தரம். (௬) பிரகிருதத்திற்கு (எடுத்துக்கொண்டதற்கு), உபயோகப்படாத வேறுபொருளைக் கூறுதல் அர்த்தாந்தரம் (வேற்றுப்பொருள்). எங்ஙனம்: "சப்தம் நித்தியம் காரியமா யிருத்தலின்." என்று அநித்தியத்தன்மையைச் சாதித்துப் பின் "சப்தம் குணம்; அக்குணமும் ஆகாசத்தினதேயாம்." என்று பிரகிருதத்திற் குபயோகமில்லாத அர்த்தத்தைக் கூறுதல் அர்த்தாந்தரம். (௭) பொருளில்லாத சொற்களைப் பிரயோகித்தல் நிரர்த்தகம் (பொருளில்லாதது). எங்ஙனம்: "சப்தம் அநித்தியம், ஜபகடதசத்தன்மையால்." என்றல் முதலியவற்

---

** இந்த ஏதுவால் குணவபேதத்தில் குணபேதம் திரவியத்தினால் சித்திக்கின்றது. இதனால் சாத்தியவிருத்தமான ஹேதுவா மென்பது கருத்து.

* அநித்தியத்துவாபாவமுடைய சாமானியத்தில் ஐந்திரியகத்துவ (இந்திரியஜந்யஞானத்திற்கு விஷயமாந்தன்மையாகிய) ஏதுவிருத்தத் தன்மையை எழுப்பி என்பது பொருள்.

† ஆகவே சாமானியம் அச்சாமானியத்திற்கு இடமாகாமையின் வியபிசாரத்தை யெழுப்புதல் கூடாது என்பது கருத்து.

றில் ஐபகடதச என்னும் ஏதுவாசகச்சொல் ஒரு பொருளையும் தராமையால் நிரர்த்தகமாம். (அ) சபையிலுள்ள (மத்தியஸ்த) புருஷனுக்காவது பிரதிவாதிக்காவது பொருள் விளங்காத சொற்களைப் பிரயோகித்தல் * அவிஞ்ஞாதார்த்தம் (பொருளுணரப்படாதது). அது வலிந்து பொருள்கொள்ளத்தக்கன, வெளிப்படாதபொருளுள்ளன, அதிவிரைவிலுச்சரிக்கப்படுவன என்னுமிவைமுதலிய வடிவினவாகிய சொற்களைக் கூறுதலாம். இஃது அவிஞ்ஞாதார்த்தம். (கூ) எவற்றின் பொருள்களுக்கொன்றற்கொன்று அந்நுவயமுண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட சொற்களைப் பிரயோகித்தல் † அபார்த்தகம் (பொருட்போலி). எங்ஙனம்: "கடம்,படம்,நித்தியம், அநித்தியம்; பிரமேயத்தன்மையால்." என்றல் முதலிய சொற்கள் அபார்த்தகமெனப்படும். (கo) பிரதிஞ்ஞைமுதலிய ‡ அவயவங்களை முறைபிறழக் கூறுதல் அப்பிராப்தகாலம் (காலம்பெறாமை). எங்ஙனம்: "சப்தத்தன்மையால் சப்தம் அநித்தியம்." என்றல்முதலிய அப்பிராப்தகாலமாம். (கக) சில அவயவங்களின்றி அவயவங்களைக் கூறுதல் நியூனம் (குன்றக்கூறல்).** அது வெளிப்படை. (கஉ) அதிகமான ஹேது முதலிய அவயவங்களைக் கூறுதல் அதிகம் (மிகைபடக்கூறல்). எங்ஙனம்: "சப்தம் அநித்தியம்; சப்தத்தன்மையால், சிரவணவிஷயமாதலால்." என்றல் முதலியன. (கங) அநுவாதமி(பின்னெடுத்து மொழிதலி)ன்றி முற்கூறியபொருளை மீண்டும் கூறுதல் புநருக்தி (கூறியதுகூறல்). அது "சப்தம் அநித்தியம்; சப்தம் அநித்தியம்." என்றல் $ முதலிய வாக்கியங்களைக் கூறுதலாம். (கச) சபையிலுள்ள மத்தியஸ்தனால் மூன்றுமுறை சொல்லப்

---

* அபூர்வசங்கேதார்த்தமுடைய தென்பது பொருள்.

† எதினின்றும் நீங்கிய பொருளுளதோ என்னும் வியுற்பத்தியால் நிரர்த்தகமே யென்பது பொருள். ஆனாலும் கேவலம் அவாசக (பொருளின்றிய)சப்தப்பிரயோகத்தால் நிரர்த்தகவாக்கியவொருமை யின்றென்பது பொருள்.

‡ வாக்கியம் பொருந்தச் செய்யும் வடிவினவாகிய அவயவங்களை.

** சப்தம் நித்தியம் என்பது மாத்திரம். இதனால் சபைமத்யஸ்தர் அறியாமையால் வாதி தோல்வியடைந்தவனாகிறு னென்று அறியத்தக்கது.

$ முதலிய என்னுஞ் சொல்லால் "காரியத்தன்மையால், காரியத்தன்மையால்" என்பது கொள்ளப்படும்.

பட்டதும் வாதியினல் மும்முறை சொல்லப்பட்டதுமாகிய வாக்கியப்பொருளேயும் பின் எடுத்துக் கூறுதிருத்தல் * அநநுபாஷணம் (பிற்கூற்றின்மை). (க௫) மத்தியஸ்தனல் அறியப்பட்ட பொருளேத் தெரியாமை அஞ்ஞானம் (அறியாமை). (கசு) விடை புகர்தற்குரியதான பிரதிவாதியினுற் சொல்லப்பட்டதனே யறிந்தும் விடைவிளங்காது சும்மாவிருத்தல் அப்பிரதிபை. (கஎ) கூடாமையால் தனக்கு வேறுகாரிய மிருப்பதாகப் போக்குச் சொல்லி வாதத்தை நிறுத்தல் விக்ஷேபம். (கஅ) தனது பக்ஷத்தில் தோஷத்தைப் பரிகரியாது பரபக்ஷத்தில் தோஷம் கூறுதல் மதாநுஞ்ஞை. (கசு) (சபைமத்தியஸ்தனிடம்) எடுத்துக்காட்டற்குரிய பிறனது தோல்வித்தானத்தை யெடுத்துக்காட்டாதிருத்தல் பரியநுயோஜ்யோபேக்ஷணம். (உ0) தோல்வித்தானமின்றியவனிடத்துத் தோல்விகூறுதல் நிரநுயோஜ்யாநுயோகம். (உக) ஒரு சித்தாந்தத்தின் அபிப்பிராயத்தை யாசிரயித்துக் கதை நிகழுங்கால் அதற்கு விரோதமான சித்தாந்தத்தின் அபிப்பிராயத்தினேத் தழுவி விடைகொடுத்தல் † அபசித்தாந்தம் (சித்தாந்தப் போலி). (உஉ) ஏதுப்போலி. இது முன் கூறப்பட்டது.

நியாயபதார்த்தம் பதினறு

முடிந்தது.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணேநம:

---

* அவ்வர்த்தத்தினே யறிவிக்கு முச்சரிப்பினே மறுபடியும் உச்சரியாதிருத்தல்.

† அஃது, ஒரு வையாகரணன் சபைமத்தியஸ்தரிடம் சப்தம் நித்தியம், உச்சரிப்பால் தோன்றியதா யிருத்தலின் என்று சங்கிக்கின், "உச்சரிப்பால் தோன்றுவதன்று சப்தம்; உச்சரிப்பு அதன் மறைப்பைமாத்திரம் நீக்குவதாம். அதனல் சப்தம் நித்தியமேயா" மென்று கூறுவது என்க.

# தர்க்ககௌமுதி,

## அகாராதி விஷயாநுக்கிரமணிகை.

தர்க்ககௌமுதியின்

அகாராதிவிஷயாநுக்கிரமணிகை

முடிந்தது.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௩0 | வாயு, ... | வாயு. |
| ௭ | ௨௮ | கெதிர் | கெதிர் |
| ௧௪ | ௨௫ | அநவத்தியவஸாயம். | அநத்தியவஸாயம். |
| ௧௭ | ௩0 | விசேஷணம் = அடை விசேஷியம். அடை யடுக்கற்பாலது. ... | விசேஷணம் = அடை. விசேஷியம் = அடை யடுக்கற்பாலது. |
| ௨0 | ௩௪ | மணி. | *மணி. |
| ௪௮ | ௨௭ | யுடையதாகாமல். ... | யுடையதாகாமல். |
| ௫௩ | ௭ | வேதிரேக ... | வெதிரேக |
| ௬0 | ௨௧ | வையாத்திய ... | வையாத்தியய |

உ

# ஸ்ரீ பஞ்சதசி.

## [பஞ்சதசப்பிரகரணம்.]

ஸ்ரீ பஞ்சதசி யென்பது சதுர்வேதபாஷ்யம் சர்வதரிசன சங்கிரகமுதலிய அநேக கிரந்தங்களை இயற்றியவரும், சர்வஞ்ஞ சித்துவசிரோமணியென உலகப்பிரசித்திபெற்றவருமான ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளால் ஸ்ரீ காயத்திரிதேவியின் வரத்தால் அருளிச்செய்யப்பட்டது. இதற்குத் தஞ்சைமாநகரம் ஸ்ரீமான் வே. குப்புஸ்வாமிராஜு அவர்கள், சிறிது சம்ஸ்கிருதமும்தமிழும் உணர்ந்தவர்களும் தமிழ்மாத்திர முணர்ந்தவர்களுமாகிய இரு திற முமுக்ஷுக்களுக்கும் உபயோகப்படுமாறு அந்நூலிற்கு மூல சுலோகங்களின்பேரில் ஓர் பொழிப்புரையும், ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளின் சிஷ்யரான ஸ்ரீராமகிருஷ்ணபண்டிதர் அவர்களது சம்ஸ்கிருத வியாக்கியானத்திற்குச் சரியான மொழிபெயர்ப்புவடிவ உரையும், அவ்வுரைகளுக்கு அங்கங்கே வேண்டியவிடத்துப் பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீபீதாம்பரஜீ அவர்களால் செய்யப்பட்ட டிப்பணியையும் மற்றும பலவுரையாசிரியர்கள் கருத்துக்களையும் அநுசரித்த ஓர் விளக்கவுரையும் எழுதப்பட்டுளது. இவ்வுரையில் மூலசுலோகம் சம்ஸ்கிருதவியாக்கியானம் என்னும் இரண்டிலுமுள்ள விஷயங்களினும் வெகு மடங்கதிகமாகத் தெரியத்தக்க விஷயங்களிருப்பதோடு ஆங்காங்கு உதாரணமாகக் காட்டப்பட்ட சம்ஸ்கிருத சுருதி சூத்திரம் சுலோகமுதலியவற்றிற்குத் தமிழுரையும் எழுதப்பட்டுளது.

இத்தமிழ்ப் பஞ்சதசியை வாசிப்பவர்கள் மற்ற எந்த நூலின் உதவியுமில்லாமல் அத்வைதவுண்மையினையும் அதன் சகல சாதனங்களையும் செவ்வையாய்த் தெரிவதோடு பிறவாதிகளாற்கலங்காதிருந்து தாம் பிறர் சம்சயங்களை யொழிப்பதிற் சமர்த்தருமாவர் என்பதற் கையமில்லை.

இவ்வரிய பெரிய நூலை நல்ல காகிதத்தில் சுத்தமாய்ப் பதிப்பித்து மனோரம்மியமான வர்ணமைமுதலியவற்றாலாகிய நேர்த்தியான சித்திரகோசமொன் றமைத்து, ஸ்ரீஆதிசங்கராசாரியரவர்கள் உருவமைந்த புகைப்படத்துடன், இவ்வுரையாசிரியராசிரியர் புகைப்படமும், உரையாசிரியர் புகைப்படமும் வைத்து இராயல் 50 பவுண்டு பேப்பரில் 8 பக்கம் அளவில் 1452-பக்கங்களுள்ள 2-புத்தகங்களாக வெளிப்படுத்தியிருக்கின்றோம். இதன் விலை ரூ. 10—0—0 தபாற்கூலி 0—15—0.

## இந்நூலாசிரியர் இயற்றியவைகளில் இப்பொழுது விற்பனைக்குத் தயாராயுள்ள புத்தகங்கள்.

| | |
|---|---|
| ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் … … … | ரூ. 4—0—0 |
| ஸ்ரீ விசாரசாகரம் … … … … | 3—0—0 |
| ஹடயோகப்பிரதீபிகை … … | 1—8—0 |
| ஸ்ரீபாலபோதம் | 1—0—0 |
| ஸ்ரீவிருத்திரத்நாவலி | 0-12—0 |
| விவேகசிந்தாமணி (வேதாந்தபரிச்சேதம்) … | 0—6—0 |
| சங்காகிரந்தாவலி பு-க. அபரோக்ஷாநுபூதி சம்ஸ்கிருத சுலோகமும் தமிழுரையும் | 0—6—0 |
| தர்க்ககௌமுதியும் நியாயபதார்த்தம் 16-ன் இலக்ஷணங்களும் (குறிப்புரையுடன் 2-ம் பதிப்பு.) | 0—6—0 |
| கீதைக்கொத்து பு-க உத்தரகீதை (சம்ஸ்கிருதசுலோகமும் தமிழுரையும்) | 0—4—0 |
| சாந்தோக்கியத்துள்ள தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம், சுகரகஸ்யோபநிஷதத்துள்ள நான்குமகாவாக்கியார்த்தத்துடன் 2-ம பதிப்பு. | 0—2—0 |
| ஸ்ரீவிசாரசந்திரோதயம் 2-ம் பதிப்பு அநேக சுருதிப் பிரமாணங்களுடன் கூடியசீக்கிரத்தில் வெளியாய்விடும் விலை ரூ. … … .. | 1—4—0 |

## பிறர் பதிப்பு

| | |
|---|---|
| தலயாத்திரைப் பொதுவிதி … … | 0—6—0 |
| திருவள்ளுவர்சரித்திரம் … … .. | 0—1—6 |
| திருவாசகம் … … … … | 1—0—0 |
| அசம்புறவராய்ச்சிவிளக்கம் … … | 1—4—0 |
| அவதூதசம்வாதம் … | 0—2—0 |
| கிருஷ்ணன்செய்திருப்புகழ் … | 0—1—0 |
| அழுகணிச்சித்தர்பாடல் … | 0—0—6 |
| அற்புதத்தேவாரத்திரட்டு … … … | 0—3—6 |
| ஆசாரக்கோவை யுரை … … … | 0—4—0 |
| ஆசாரத்திரட்டு … … .. | 0—4—0 |
| இந்துபாகசாஸ்திரம் … . … | 0—8—0 |
| இனியது நாற்பது உரை … … … | 0—3—0 |
| எழுபதுதிருக்கைவழக்கம் … .. | 0—1—0 |
| ஐந்திணை ஐம்பது உரை … … .. | 0—3—0 |
| சிதம்பரமகாத்மியம் (கிரந்தம்) … … | 0—4—0 |
| சிவதத்துவவிவேகம் ஷை … . … | [illegible]—8—0 |